முதல் அவர் திருநாட்டிற்கெழுந்தருளின நாழிகையளவாக இந்தலோகத்திலே கலிபுருஷன் நஷ்டனாய்ப்போய்க்ருதயுகமாயிருக்குமென்று நம்மாழ்வார் திருவாய்மொழியிலேவெளியிட்டு அப்படியேநடந்திருக்க, பாஷ்யகாரரெதிரே கலிபுருஷன்வந்து நின்றுவார்த்தைசொன்னனென்று எழுதினது மாறுபாடு.

குசும்பட்டனென்பானொருவனுண்டென்று குருபரம் பராப்ரபாவம் முதலாகிய க்ரந்தங்களிலே ஒன்றிலுஞ் சொல்லியிராமையாலே, குசும்பட்டனென்றொருவனுண்டென்றும் அவனுக்குப் பெண்களிருவருண்டென்று மெழுதியது மாறுபாடு. பட்டருடைய விரக்தியும், ஜ்ஞாநம் முதலான கல்யாணகுணங்களும், அவருடைய புண்யசரிதங்களும், உபயஸம்ப்ரதாயஸ்தருக்கும் ஒப்புதலாயிருக்கிற படியாலே பட்டர்விஷயத்திலே யெழுதிய தூஷணங்கள் மிகவும்மாறுபாடு.

இப்படி பொதுமையாயிருக்கப்பட்ட வர்த்தங்களிலே வடகலையார் மாறுபாடுகள் பலவுங்கல்பித்து எழுதிவித்தபடியாலே, பிள்ளை லோகாசார்யர் விஷயத்திலும் பெரியஜீயர்விஷயத்திலும் அவர்களெழுதிவித்த தூஷணங்கள் மிகவும் மாறுபாடாயிருப்பது ஸத்யமென்று நினைக்கவேணும். பிள்ளை லோகாசார்யருக்கும் வேதாந்தாசார்யருக்கும் பதகமலவிஷயத்திலும் பாதுகாவிஷயத்திலும் கவிசொல்லுகிறத்தில் ஒருவர்க்கொருவர் கலஹப்பட்டு ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொண்டு ச்லோகங்கள் சொல்லுமிடத்தில் வேதாந்தாசார்யர்மாத்ரம் ஆயிரமும் முடித்தார்; பிள்ளை லோகாசார்யர் முடிக்கமாட்டாதே போனரென்றுயெழுதியது மிகவும் மாறுபாடு. ஸ்ரீரங்கத்திலே ஐந்தாம்பேரமான செல்வருடையபுறப்பாட்டை, நம்பிள்ளை திருவோலக்கங் கூட்டங்கலையாமைக்காக பெரியபெருமாளே நம்பிள்ளைநாளிலே நிறுத்திப்புகட்டாரென்று லோகப்ரஸித்தமாயிருக்க, விஜயரங்கசொக்கநாயக்கன் தாதாசார்யரிடத்தில் த்வேஷத்தாலே ஐந்தாம்பேரத்திற்கு நித்யோத்ஸவமில்லாமல் நிறுத்திப்புகட்டானென்று எழுதினது மாறுபாடு. இப்படியே வடகலையாரெழுதிவித்த தங்கள் மதபூஷணமும் இல்லாதவதிசயத்தைக் கல்பித்தெழுவித்தார்களென்று நினைக்கத்தக்கது.

பாஷ்யகார ஸம்ப்ரதாயஸ்தரனைவருக்கும் நித்யமாக வநுஸந்திக்கத்தக்கதான குருபரம்பராவாக்யம் பதிமூன்றிலே முதல்மூன்று வாக்யம் ச்ருதிவாக்யமாயிருக்கும், மேல் பத்துவாக்யங்களும் பாஷ்யகாரர் நியமனத்தாலே பாஷ்யகார சரணாரவிந்தமென்று பெயர்பெற்றிருக்கிற கூரத்தாழ்வான் செய்ததாயிருக்கும். இப்படியிருக்க இந்த பதிமூன்று வாக்யத்தின் நடுவே வேதாந்தாசர்யர் விஷயமான வாக்யத்தை நூதநமாகக் கல்ப்பித்து வடகலையார்கூட்டி யநுஸந்திக்கிறது அஸங்கதம்.

இப்படி யாழ்வார்கள் சரிதங்கள்முதல் இதிலே யெழுதிவைத்ததை யெல்லாம் பழமையாயிருக்கப்பட்ட க்ரந்தங்களிலே தென்கலையார் மூதலிப்பார்கள்.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

# பழநடைவிளக்கம்.

முற்றிற்று.

---

